# கடவுள் பாட்டு

பாவலர்

**தாமரையான்**



**தமிழாலயம்**

137, ஜானி ஜான் கான் தெரு

சென்னை-600014

Kadavul Paattu

By

Pavalar Thamarayan



May, 1977

May, 1987

Price Rs. 5-00

Published by

Thamizhalayam

137, Jain Jan Khan Road,

Madras 600014

Phone : 82731

All Books Published by Thamizhalayam are Available at

M/s Paari Nilayam 187, Prakasam Road, Madras-600108

M/s Ainthinai Pathippagam, 184, Barathi Salai, Madras-600 005.

M/s Saiva Siddhanta Noorpathippu Kazhagam, 154, T.T.K. Road, Madras-600 018.

M/s Anand Publications, 15, Theetharappan Street, Madras-600 005.

---

Printed at Novel Art Printers, Madras-600 014

Phone: 82731

# பதிப்புரை

புதிதாகப் பிறந்த குழந்தை, தொட்டிலிலே கிடந்து வீட்டு முகட்டைப் பார்த்தபடி சிரிக்கிறது. அது சிரிக்கும் போது தோட்டத்துப் பச்சை இலைகளுக்கு நடுவே பூத்துக் குலுங்கும் மலர்போல ஒரு ஒளி வீசுகிறது. அந்தக் குழந்தை யாரைப் பார்த்துச் சிரிக்கிறது என்று கேட்டால், அதன் அன்னை என்ன பதில் சொல்லுகிறாள்.

அது
கடவுளோடு
பேசிச்
சிரிக்கிறது
என்று கூறுகிறாள்.



இது உண்மையோ, தாயின் அன்பு மனத்தில் பிறந்த அழகிய கற்பனையோ தெரியாது. ஆனால், அந்தச் சிரிப்பிலே ஓர் ஒளி—தெய்வீக ஒளி—பார்ப்பவர் நெஞ்சைப் பறித்திழுக்கும் அன்பு ஒளி இருக்கிறது என்பதுமட்டும் உண்மையான உண்மையே தான்.

உலகில் மனிதனுக்குப் புரியாததெல்லாம் கடவுள் செயலாகக் கருதப்படுகிறது. இதற்குக் காரணம், மனிதன் எவ்வளவு தான் அறிவு மேம்பட்டவனாக வளர்ந்தாலும் அந்த அறிவு மேம்பாட்டைக் கடந்த அறியாமை இருக்கத்தான்

செய்கிறது. அந்த அறியாமையை விளக்கக் கூடிய ஓர் ஆற்றல் பெற்ற தலைவனாகக் கருதப்படுபவர் எல்லாம் வல்லவராக விளங்குகின்ற கடவுளே யாவார்.

'அறிதோறறியாமை கண்டற்றே' என்பது தெய்வமறை. நாம் ஒன்றைப் புதிதாக அறிந்து கொள்ளும் போதெல்லாம், இதுவரை நாம் அதை அறியாமல் இருந்த தன்மையை உணர்கிறோம். அது மட்டுமன்று இன்னும் நாம் அறியாதவை எத்தனையோ உள என்பதையும் அறிகிறோம். எல்லாம் அறிந்து விட்டோம் என்று நினைப்பவர்கள் அற்பர்கள். அவர்கள் அறிந்தது கைப்பிடியளவுதான். அவர்கள் அறியாமையோ உலகளவு ஆகும்.

உலகளவு அறியாமை விளங்குகின்ற போது, மனிதன் அறிந்தது சிறு பகுதிதான் என்று உணர்கின்ற போது, மனிதன் தன் ஆற்றலெல்லாம் கூட்டி, இனி முடியாதது என்று கை விட்டுவிடக் கூடிய ஒரு நிலைவரும்போது வந்து கிடைக்கும் உதவி அல்லது அருள் யாருடையதாயிருக்கும். நிச்சயமாக இறைவனுடைய தண்ணளிதான் அது.

இதையுணர்ந்து தான் பெரியவர்கள், அவன் எல்லாம் வல்லவன்—அளவற்ற அருளாளன்—நிகரற்ற பொருளாளன் என்றெல்லாம் இறைவனைக் குறிப்பிட்டு மகிழுகிறார்கள்.

இறைவனை யாரும் கண்ணாரப் பார்த்ததில்லை; இறைவனை இதுவரை யாரும் நேருக்கு நேராகச் சந்தித்தது இல்லை. ஆனால், கதைகளிலே இறைவனை நேருக்கு நேராகச் சந்தித்ததாகவும், பேசியதாகவும், அடியார்களுக்கு அவன் கூடவே வந்து உதவியதாகவும் நாம் படிக்கிறோம். இவை யாவும் கற்பனையே. ஆனால் இறைவன் காட்சியளித்ததும், பேசியதும், நாடகமாடியதும் கற்பனையாக இருக்க முடியுமே தவிர இறைவனே கற்பனையாக இருக்க முடியாது. இறைவனே கற்பனையாக இருந்தால், இந்த அண்ட கோளங்கள் அனைத்தையும் , சிறிதும் பிசகாத கணக்

கோடு, இயக்கி நடத்துகின்ற ஆற்றல் வாய்ந்த ஒரு பெருந் தலைவனை நாம் மறுப்பதாகும்.

ஒரு மலையின் உச்சியிலிருந்து உருட்டி விடும் கல், இன்ன இடத்தில்தான் போய்விழும் என்பதை நாம் கணிக்க முடியாதவர்களாயிருக்கிறோம். ஆனால். கோளங்கள் ஒன்றையொன்று இழுப்புச் சக்தியால் ஈர்த்துக்கொண்டிருப்பதையும், ஒன்றையொன்று கணக்காகச் சுற்றி வருவதையும், அவற்றின் சுழற்சிகளால். பருவங்கள் மாறுபடுவதையும், ஆண்டு தோறும் பருவங்கள் தவறாது அவ்வக்காலத்தில் வருவதையும், இப்படிப் பல நிகழ்ச்சிகளையும் பார்க்கின்றபோது ஆற்றல் வாய்ந்த இறைவனின் மிகப் பெரிய நிலையை நாம் தெளிவாக உணர முடிகிறது.

கோளப் பரப்பில் எங்கோ ஒரு மூலையிலே ஒரு சின்னஞ் சிறிய உயிராக இயங்கிக் கொண்டிருக்கும், நம்முடைய தனிப்பட்ட வேண்டுகோள்களைச் செவிமடுத்து அவரவருக்குரிய அருளிச் செயல்களை எவ்வெவ்வாறோ நிறைவேற்றிக் கொடுத்து மிகச் சிறிய செயலும் தன் பெருஞ் செயவீடுபாட்டால் பிழையுறாது நடத்திக் கொடுத்து வரும் ஆண்டவனுடைய நுண்ணிய நிலையையும் நாம் பன்முறையும் உணர முடிகிறது.

இறைவனை வேண்டித் தொழுததாலேயே பல நற்செயல்கள் மிக எளிதாகவும் விரைவாகவும் நிறைவாகவும் தங்கள் வாழ்க்கையில் நடந்ததைப் பலர் அனுபவத்தில் அறிந்து உணர்ந்து ஆனந்த வயமாகியிருக்கிறார்கள். இப்படிப்பட்ட அருளாளனாகிய பேரிறைவனைப் பாடிப்பாடித் தொழுவது—தொழுது வேண்டுவதே-ஒரு பேறாகும். இப்பேற்றினை மானிடப்பிறப்பாளர்கள் அடைந்து மகிழவேண்டும் என்பதற்காக, பல சான்றோர்கள் போற்றிப் பாடல்களை இயற்றி வைத்திருக்கிறார்கள். இறைவனைப் பாடுவதன் மூலம் உளத்தூய்மை பெற்றவர்கள் தங்கள் உள்ளக் கோயில்களை

இறைவன் வந்து தங்குவதற்காகத் நிலைப்படுத்தி வைத்தவர் களாகிறார்கள்.

போற்றிப் போற்றி இறைவனை எத்தனையோ பேர் பாடிவிட்டார்கள். பாடப்பாடப் புதுப்பொருள் தோன்றிக் கொண்டேயிருக்கிறது. எத்தனை பேர் பாடினாலும், ஒவ் வொன்றும் சுவை புதிதாய், பொருள் புதிதாய், முறை புதி தாய் இருப்பதையே காணுகிறோம். அப்படி வந்த வரிசை யிலேதான் இந்த "கடவுள் பாட்டு" என்ற பாமாலை விளங்கு கின்றது. இப்பாடல்கள், நேரில் இறைவனோடு பேசும் பாங்கில் கற்பனையாக எழுதப்பெற்றிருந்தாலும், இவை கற்பனை கடந்த ஓர் உண்மையான உணர்வின் வயப்பட்டு நின்ற உள்ளத்தின் பொழிவாகும்.

மனித அறிவுத்திறன் ஒன்றையே மதித்து, இறை யுணர்வை மறுத்து நிற்பாரின் மயக்கினை யறுக்கவல்ல இப் பாடல்கள் படிப்பவர் உள்ளத்தைத் திருத்தும் பாங்கினவாம்.

மாணிக்கவாசகர் வள்ளலார் போன்ற அருட்பெருஞ்செல் வர்களின் அருளிச் செயல்களை யொத்த திருப்பாக்கள் இவை. இவற்றை நாள் தோறும் படிப்பவர் உள்ளத்திலே இறை யுணர்வு பொங்கித் திருவருள் தங்கி நிற்கும்.

பாவலர் தாமரையான் இயற்றிய இத்தேனொழுகு பாடல்களைத் தமிழ் மக்கள் திரு முன் படைக்கின்றோம்! எல்லாம் வல்ல இறைவன் திருவருளால், தமிழ் மக்கள் சாதி சமய வேறுபாடுகள் ஒழிந்து, இறைவன் திருமுன் இவ்வுலக மக்கள் அனைவருமே ஒருநிகராக வாழ வேண்டுமென்னும் பொதுநிலை யெய்தி தத்தம் வாழ்வில் சிறப்புறுக என வாழ்த்துகிறோம்!

—தமிழாலயம்

# கடவுள் பாட்டு

உள்ளி நின்னை வணங்கிடுவார்
உள்ள மெல்லாம் நிறைந்தவனே
கள்ள மின்றி உன்பெருமை
கதைப்பார் பங்கில் இருப்பவனே!
வெள்ளக் கருணைத் திறங்கேட்டு
வியப்பார்; வியந்து கூவிடுவார்
அள்ளி மலர்தூய் அடிபணிவார்
அகத்தில் உறையும் பெருமானே! 1

விண்ணும் மண்ணும் நிறைந்தண்ட
வெளியும் கடந்து நின்றவனே
எண்ணில் அடங்காப் பேராற்றல்
இயைந்த மூலப் பெருமானே
கண்ணில் காணும் சுடர்க் கெல்லாம்
கனிந்து நல்கும் ஒளியுடைய
வண்ணப் பிழம்பே பேரொளியே
வணக்கம் உன்றன் பொன்னடிக்கே. 2

அறமே வடிவாய் உள்ளவனே
அழுக்கு மலங்கள் அற்றவனே
திறமே மிக்க மேலவனே
தெளிந்த நீரைப் போன்றவனே

அறிவே மிக்க முன்னோரால்
ஐயன் என்னப் பெற்றவனே
பொறிகட் கெட்டா நுண்ணியனே
போற்றி உன்பொற் றிருவடியே! 3

என்றன் நெஞ்சத் தாமரையில்
இனிதுன் அடிவைத் தெழுந்தருள்வாய்
ஒன்றுந் துன்பம் வாராதே
உவந்து காக்கும் எம்பெருமான்!
நன்றுன் அடியைப் பிடித்தோர்க்கு
நன்மை யன்றித் தீதுண்டோ?
என்றும் உன்னைத் தொழுதிடுவேன்
இன்ப வாழ்வு பெருகிடவே! 4

பாலில் வெண்ணெய் உள்ளதுபோல்
பாரெங் கும்நீ பரந்துள்ளாய்!
பாலில் வெண்ணெய் கடைவதுபோல்
பக்தி யாலே உனையடைவேன்!
பாலில் வெண்ணெய் கடைந்தெடுக்கும்
பக்கு வத்தை யறியாதார்
பாலில் வெண்ணெய் இலையென்பார்
பக்தி யில்லார் உனைக்காணார்! 5

உலகம் முழுதும் உவந்தேத்தும்
ஒப்பில் தலைவ எனைக் காப்பாய்!
இலகும் ஒளிசேர் நற்பிழம்பே
என்னை என்றும் நீகாப்பாய்!
நலமே வடிவாய் உள்ளவனே
நாளும் என்னை நீகாப்பாய்!
மலரும் அன்பே உருவான
மன்னா என்றும் எனைக் காப்பாய்! 6

பிறவித் துன்பம் அறுத்தருளும்
பெருமா என்னை நீகாப்பாய்!
உறவு துறந்துன் அடிக்கமலம்
உறவே வந்தேன் எனைக்காப்பாய்!
அறிவுக் கண்ணைத் திறந்தவனே
அன்பு நெஞ்சைக் கொடுத்தவனே!
நெறியில் என்னைச் செலுத்துகின்ற
நேர்மை மிக்கோய் எனைக்காப்பாய்! 7

கல்லை மண்ணைப் படைத்தாய்நீ
கடலை மழையைப் படைத்தாய்நீ
புல்லைப் பூண்டைப் படைத்தாய்நீ
புழுவைப் பாம்பைப் படைத்தாய்நீ
நில்லா தோடும் விலங்குகளை
நிலைத்து நிற்கும் மரவகையை
வல்லே பறக்கும் புள்ளினத்தை
வணங்கும் என்னைப் படைத்தாயே! 8

உலகைப் படைத்தாய் நீ, உன்னை
ஒருவ ரேனும் படைக்கவிலை!
உலகைக் காத்து வருகின்றாய்
உனக்கோர் காவல் வேண்டாமே!
உலகை யழிப்பாய் நீயே தான்
உன்னை யழிப்பார் யாருமிலை!
உலகில் உனக்கு மேலாக
ஒன்றும் இல்லை பெருமானே! 9

தேனும் பாலும் சர்க்கரையும்
சேர்த்துக் கலந்த தீஞ்சுவை போல்
யானும் நீயும் உன்னருளும்
அடைந்த கலவிச் சுவை பெரிதாம்!

வானம் நோக்கும் மலரிடத்து
மணத்தைப் போலே அன்பருளத்
தானம் எங்கும் நிறைந்தவனே
தலைவா,' என்றன் பெருமானே! 10

கால மறிந்து பாலூட்டும்
கடமை மறவாத் தாயினைப்போல்
ஞாலத் தன்பர்க் கருள்புரியும்
நாளை யறிந்து நலஞ்சேர்ப்பாய்!
கோலங் காட்டா விட்டாலும்
குருவாய் அறிவைத் தெளிவித்து
மாலம் நீக்கி நன்னெறியில்
மனத்தை ஈர்ப்பாய் பெருமானே! 11

அழியும் பொருள்கள் பல கொண்டே
அழியா உலகைப் படைத்தாய் நீ
பிழியும் தேனைப் போலினிய
பெரிய குணத்தை யுடையவனே,
தொழிலைத் தவறா தியற்றிடுவார்
சுகத்தை யடையச் செய்திடுவாய்
தொழில்செய் யாத பேர்களுக்கே
துன்பம் என்று வகுத்தாயோ? 12

உள்ளி உள்ளித் தொழுவார்க்கே
உருவங் கொண்டு தோன்றிடுவாய்
எள்ளி எள்ளி நகைப்பவர்க்கோ
இன்மை யாகிச் சென்றிடுவாய்
அள்ளி அள்ளிப் பருகிடவே
ஆறாய் ஓடும் அருட்புனலே
துள்ளித் துள்ளி வந்தென் உளத்
தூய கோயில் புகுவாயே! 13

உண்ணும் உணவை மண்ணுக்குள்
ஒளித்து வைத்த பெருமானே
எண்ணங் கொண்ட உடன்பருக
எளிதில் நீரை மேல்வைத்தாய்
கண்ணிற் காணாக் காற்றினையோ
கனிவோ டெங்கும் பரந்திருக்கப்
பண்ணி வைத்தாய் உன்கருணை
பகர்தற் கெளிதோ பெருமானே! 14

அறத்தைப் பொருளை இன்பத்தை
அழியா வீட்டைத் தந்தருளும்
திறத்தை யுடைய திருமறையைத்
திருவாய் மலர்ந்த பெருமானே!
வெறுத்தல் இன்றி எனைக்காக்க
விரைந்து வந்த குருதேவா!
ஒறுத்த போதும் என்னறிவை
உயரச் செய்வாய் அறிவாளா! 15

காசுக் காக உழைத்துழைத்துக்
காலங் கழித்தேன் பெருமானே
காசு வந்து சேரவிலை
காலச் சுழற்சி நிற்கவிலை
ஈசன் உன்தாள் பற்றுதலே
இனிஎன் கடமை எனக்கொண்டேன்
காசு தூசாய்ப் போயிற்றுன்
கடைக்கண் ஒளியின் முன்னாலே! 16

ஆசை என்னும் பேயென்னை
அலைக்க ழிக்கும் போதுமணி
ஓசை யோடு நீவருவாய்
ஓடிப் போகும் அப்பேயே!

பூசை செய்தே உனைத்தொழுவேன்
புதிய கருத்தென் மனத்துதிக்கும்
தேசை யுடைய திருவடியைத்
தினமும் பணிவேன் பெருமானே! 17

பெற்ற பிள்ளை மாட்டன்பு
பெரிதும் உடையாள் நற்றாயே
கற்ற பிள்ளை மாட்டன்பு
காட்டும் நல்ல கணக்காயன்
வற்ற ஏழை மாட்டன்பு
வைப்பான் வள்ளல் உன்தாளைப்
பற்ற வந்தோர் யார்க்கும்நீ
பாகு பாடில் அன்புடையாய். 18

செல்வம் பெற்ற மனிதரெலாம்
செருக்கும் பகட்டும் கொண்டிடுவார்
கல்வி வல்ல புலவரெலாம்
கருவங் கொண்டு தருக்கிடுவார்
வல்ல பதவி யுற்றவர்கள்
வணக்க மின்றிச் செருக்கிடுவார்
வெல்லும் இறையுன் அருள்பெற்றோர்
மேலும் எளியர் ஆவாரே; 19

என்னைப் படைத்த பெருமானே
எனக்குத் துணையாய் ஒருபெண்ணைப்
பின்னைப் படைத்துக் கொடுத்தாய்நீ
பெருவாழ் வடைந்தேன் அவளாலே!
என்னில் அவளைச் சேர்த்து நீ
இந்த உலகம் தழைத்திடவே
பின்னும் பிள்ளைக் கனிபடைத்தாய்
பெரியோய் உன்றன் அருளென்னே! 20

அந்தப் பிள்ளை குறுஞ்சிரிப்பில்
அழகிய உன்றன் நகைகண்டேன்
மந்த மற்றுக் குறும்பியற்றி
மகனும் ஓடி விளையாட
எந்தாய் உன்றன் திருவிளையாட்
டெனவே கண்டு மனமகிழ்ந்தேன்
சொந்தக் குழந்தை மழலையிலுன்
சொக்கும் தெய்வ மொழிகண்டேன். 21

ஆகும் பொருள்கள் அத்தனையும்
ஆக்கிப் படைப்போன் நீஐயா!
ஆகி நின்ற பொருளெல்லாம்
ஆண்டு காப்போன் நீ ஐயா!
ஆகிக் காலம் ஆனதன்பின்
அனைத்தும் அழிப்போன் நீ ஐயா!
ஆக உன்றன் மனவிருப்பே
அனைத்தும் எனக்கண் டேனையா! 22

அண்டச் சுழற்சி அத்தனையும்
ஐயா உன்றன் ஆணையன்றோ!
உண்டோர் ஒழுங்கென் றுரைத்திடவே
உருட்டு கின்றாய் முழுதும் நீ
கண்ட ஒழுங்கு மீறுமெனில்
காற்று மீறும் ஊழியிலே
அண்டம் அனைத்தும் பொடியாகும்
அருளின் கடலே அதுவேண்டாம்! 23

வயலில் உழைத்துக் களைத்தவர்க்கு
வாரிக் குடிநீர் வழங்கிடுவாய்
வெயிலில் மழையில் அலைந்தவர்க்கு
வீடும் நிழலும் கொடுத்திடுவாய்

துயிலில் சோம்பிக் கிடப்போர்க்குச்
சோர்வ கற்றித் தென்பளிப்பாய்
அயலில் துயரப் பட்டோர்க்குன்
அடியின் நிழலை யருள்வாயே! 24

நல்ல நல்ல குணமெல்லாம்
நல்கும் ஆற்றல் உனக்குண்டு
பல்லோ ருள்ளும் எனைச்சிறக்கப்
பண்ணும் ஆற்றல் உனக்குண்டு
கல்வி செல்வம் எனைச்சேரக்
கனியும் அருளும் உனக்குண்டு
எல்லாம் தந்துன் திருவடியை
எய்தும் பேறும் தருவாயே! 25

உள்ளத் துள்ளே ஓய்வின்றி
ஊறும் அமிழ்தே, பெருங்கருணை
வெள்ளப் பொழிவே, அறிவென்னும்
விளக்கை ஏற்றும் ஒளிச்சுடரே,
கள்ள மற்றார் அசைவெல்லாம்
காட்சிப் பொருளாய் வெளிப்பட்டுத்
தெள்ளத் தெளியார் உள்ளத்தைத்
தெளிவித் தருளும் திருவாளா! 26

ஆறு காலப் பூசையிலும்
ஐயா உன்னைத் தொழுதேத்தும்
பேறு கிடைக்கப் பெற்றிலனே
பிழையென் பிழையோ கொற்றவனே!
நூறு முறைதான் தொழுதாலும்
நோன்பு காத்துக் கிடந்தாலும்
வேறு யாரும் எனைப்போலே
வேண்டி யன்பாய்த் தொழுவாரோ? 27

பிறக்கு முன்னே இருட்குகையில்
பேச்சும் மூச்சும் அற்றிருந்தேன்
பிறந்த பின்னே ஒளிவெளியில்
பேச்சும் மூச்சும் பெற்றிருந்தேன்
பிறக்கச் செய்தாய் நீயென்றே
பெரிதும் உள்ளம் நொந்திருந்தேன்
பிறவித் துயரங் களைவையெனப்
பெரிதும் இன்பங் கொண்டேனே! 28

பாடு பட்டே அறியாதான்
பச்சை நெல்லைப் புல்லென்பான்
ஏடு தொட்டே அறியாதான்
எழுத்தைக் கிறுக்கல் என்றிடுவான்
ஓடுள் ளிருக்கும் பருப்பேபோல்
உயிருக் குயிராய் உள்ளுறைந்தே
ஆடும் பொருளே உனையறியான்
அனைத்தும் பொய்யென் றுரைத்திடுவான். 29

இன்ப துன்ப மில்லாதாய்
எனினும் இனியார்க் கெந்நாளும்
இன்பந் தந்து துன்பத்தை
எளிதில் துடைக்க முன்வருவாய்!
அன்பில் லார்க்குன் அருளில்லை
அறிவில் லார்க்குன் ஒளியில்லை
அன்பும் அறிவும் உடையார்க்குன்
அருளை ஒளியைப் பெய்திடுவாய்! 30

அடியி லிருந்து முடிவரையில்
அனைத்தும் ஒருங்கு காத்தருளும்
முடிவி லாற்றல் உடையவனே
முழுமுத லாய பெருமானே

சுடரும் ஒளியே, இன்னதெனச்
சொல்ல வொண்ணா நுண்ணுணர்வே
அடியார்க் கெளியாய்; அண்டவெளி
யாவும் ஆன பெரும்பொருளே! 31

இன்ப துன்பம் தனக்கென்றே
என்றும் யாண்டும் இல்லாதாய்
அன்பில் லாதார்க் கெஞ்ஞான்றும்
அகன்று செல்லும் வான்போன்றாய்.
அன்பில் அன்பாய்க் கலந்துன்றன்
அன்பர் நெஞ்சில் நிறைந்திருப்பாய்
உன்பொன் னடிகள் தொழலன்றி
ஒன்றும் அறியேன் பெருமானே! 32

பொய்யைத் தொலைத்தாய் வஞ்சகத்தைப்
போக்கி விட்டாய் நெஞ்சகத்தே
மெய்யின் வடிவாய் நீவந்து
வீற்றி ருந்தாய் நான்தொழுதேன்!
ஐயா, உன்னை அடைந்தவர்க்கே
அல்லல் உண்டோ? உன்கருணைப்
பொய்கை நீரில் அழுந்தி விட்டால்
பொசுக்கும் வெம்மை தொலையாதோ! 33

நெக்கு நெக்கு நானுருகி
நேயம் வைத்தேன் உன்னடிக்கே
புக்குப் புக்கென் நெஞ்சகத்தில்
பொருந்தி யிருப்பாய் பெருமானே
மக்கு மக்காய் நானிருந்தேன்
மறையும் தமிழும் கொண்டுணர்த்தி
மிக்க தக்கான் ஆக்கினைநீ
மேலோய் உன்னைப் போற்றிடுவேன். 34

பற்றால் வந்த துன்பமெலாம்
ஐயா உன்தாள் பற்றிவிட்டால்
எற்றி யடித்த காட்டெருமை
எகிறி யோடல் போலோடும்
குற்ற மற்ற பேரொளியைக்
கொடுக்குஞ் சுடரே, என்நெஞ்சைச்
சற்றும் விட்டுப் போகாதே
தங்கி நலத்தைக் காப்பாயே! 35

கதிருக் கொளியைப் படைத்தாய்நீ
காட்சிப் பொருளுக் கெழில்கொடுத்தாய்
எதிலும் இன்பம் தரும்அமைப்பை
இருத்திப் படைத்தாய் எம்பெருமான்
புதிரைப் போன்ற உன்படைப்பைப்
புரிந்து கொண்டால் வரும்இன்பம்
எதற்கும் நிகரா காததனை
எனக்கும் புரிய வைத்தாயே! 36

உன்றன் அருளால் பெண்ணின்பம்
உற்றுத் துய்த்தேன் எம்பெருமான்
ஒன்றன் பின்னொன் றாய்வந்தே
உற்ற பிள்ளைக் கூட்டத்தை
என்றன் உழைப்பு முயற்சியினால்
ஏந்தி வளர்த்துப் பெரிதாக்கி
நின்றேன் ஐயா உன்கருணை
நிலைக்கும் என்பால் எனநம்பி! 37

நம்பி னாரைக் கைதூக்கி
நடக்கச் செய்யும் அருளுடைய
எம்பி ரானே உனைநம்பி
இருந்தேன் இந்தப் பேருலகில்.

கொம்புத் தேனைப் போலின்பம்
கொட்டும் உன்றன் இணையடிகள்
நம்பித் தொழுது கிடக்குமெனை
நாளுங் காப்பாய் உன்நிழலில்! 38

செல்வ மிக்கார் பொருளொன்றே
தெய்வ மென்று கருதுகின்றார்
கல்வி வல்லார் தம்மறிவே
கடவு ளென்று பேசுகின்றார்
வல்ல உடலைப் பெற்றவர்தம்
வலிமை நம்பி வாழுகின்றார்
எல்லாம் வல்ல பெருமானே
எனக்கு நீயே பெருந்துணையாம்! 39

ஆடும் மாடும் தெய்வமென
ஆடிப் பாடித் தொழுவதில்லை
கூடு கட்டி வாழுமினக்
குருவி கூடத் தொழுவதில்லை
தேடும் அறிவும் ஆராயும்
திறனும் கொண்ட மனிதன்தான்
ஆடும் படிக்கிவ் வுலகத்தை
ஆட்டும் இறைவா தொழுகின்றேன்! 40

தொழுதால் என்ன பயனெனவே
தோழன் ஒருவன் எனைக்கேட்டான்
அழுதால் என்ன பயனெனவே
அழும்பிள் ளைதான் அறியாதோ?
எழுதா மறையை உலகிற்கே
ஈந்த பெருமா உனைநம்பித்
தொழுதால் வருமப் பயனெல்லாம்
சொல்லத் தெரிய விலையப்பா! 41

ஆடு கோழி பலியிட்டே
அறிவி லாதார் உன்னருளை
நாடித் தொழுமச் செயல்கண்டே
நடுங்கி நின்றேன்; மனந்துடித்தேன்
பாடிப் பாடித் தொழுதாலே
பலன ளிக்கும் பெருமானே
கூடி யுன்னை வேண்டுதற்கே
கொலையும் புலையும் வேண்டாமே! 42

எங்கள் தெய்வம் கதிகாட்டும்
எங்கள் வேதம் நெறிகாட்டும்
இங்கே வாரீர்;எம்சமயத்
திணைய வாரீர் எனவழைத்தார்.
எங்கள் தெய்வம் உங்களதென்
றேனோ பேசித் திரிகின்றார்
எங்கும் உள்ள பெருமானே
இவர்க்கும் அறிவை யருளாயோ? 43

தெய்வம் ஒன்றென் றெண்ணியபின்
சேரும் வழியும் ஒன்றன்றோ?
மெய்யாய் உன்றன் அடிபணிந்தால்
மேவும் இன்பம் பெரிதன்றோ?
பொய்யாய் மதங்கள் பலப்பலவாய்ப்
போற்றி யறிவைக் குழப்புவதேன்
ஐயா இந்தக் கலகமெலாம்
அணுகா தென்னைக் காத்தருள்வாய். 44

நரகம் சேரா திருப்பதற்கே
நம்பன் அடியைச் சேருங்கள்
சிரம மின்றிச் சொர்க்கத்தில்
சேர்ப்பான் என்று விளம்பரங்கள்

அருமை யாகச் செய்கின்றார்
ஐயா நீயும் விளம்பரத்தில்
பெருமை கொள்ளும் பெருமானே
பித்தோ மாந்தர் செயலெல்லாம்? 45

பாவம் செய்யா துன்னடியைப்
பற்றிக் கிடந்தால் அதுபோதும்.
தேவ தேவா உன்நிழலே
சேரும் சொர்க்கம் எனநினைத்தால்
கூவி யழைத்துக் காட்டுகின்ற
கோணல் சொர்க்கம் வேண்டாமே!
தேவ மாதர் இருந்தாலும்
தேவை யில்லை யவர்சொர்க்கம்! 46

பகலைச் செய்யும் கதிருக்குப்
பாய்ச்சும் ஒளியைக் கொடுத்தாய்நீ
இகலிப் பொலியும் நிலவுக்கே
இன்பக் குளிர்ச்சி சேர்த்தாய்நீ
அகலும் நெருப்பில் வெப்பத்தை
ஆக்கி வைத்தாய் இளங்காற்றில்
சுகத்தைப் படைத்த பெருமானே
சுவைக்கும் வாழ்வை யருள்வாயே! 47

எப்பொ ருட்கும் முன்னுள்ளாய்
எல்லாம் உடைய பெருமானே
ஒப்பில் லாத பேரொளியே
உள்ளத் துள்ளே பொலிவானே
தப்பில் லாத வீணையிலே
தமிழை யிசைக்கும் மேலோனே
அப்பாற் கப்பா லானாலும்
அழைத்தால் வருநல் அருளோனே! 48

விரிந்த வானின் மேல்விரிந்த
வெளியாய் நிற்கும் ஒளிப்பொருளே
இருந்த அணுவின் உள்ளடங்கி
இருக்கும் நுண்மைச் சிறுபொருளே
அருமை மிக்க பொருளிலெலாம்
அருமை யான அரும்பொருளே
பெருமை மிக்க பெருந்தலைவா
பிரியேன் உன்றன் திருவடியே! 49

நூறு கலைகள் கற்றாரும்
நுகர்தற் கரிய இன்பொருளே
ஈறு முதலும் அற்றவனே
இனிக்கும் உன்றன் அடிபற்றும்
பேறு மிக்கார் எளிதாகப்
பெறுதற் கிசைந்து வருந்தேவே
கூறு பட்ட மதங்களிலே
கூடா தென்னைக் காத்தருள்வாய். 50

அன்பு மனைவி ஒருத்திதனை
அளித்தாய் எனக்கு நீஇறைவா!
பின்பு நானோர் பெண்தேடிப்
பிழையா வண்ணம் அருள்புரிவாய்
துன்பம் வளரும் பலபெண்கள்
தொடர்பால் நல்ல மனம்போகும்
உன்பொன் னடியைப் பற்றுகின்ற
உறுதி கொண்டேன் எனைக்காப்பாய்! 51

கன்னங் கரிய கூந்தலினைக்
கருவண் டனைய பெருவிழியைச்
சின்னஞ் சிறிய துடியிடையைச்
செவ்வாய் அழகுப் புன்சிரிப்பை

முன்னம் பருத்த கொங்கையினை
முகத்தின் அழகைக் காட்டிவரும்
அன்னம் அனைய பிற மாதர்
ஆசை விலக்கி எனைக்காப்பாய்! 52

ஐயா உன்றன் அருள்வேண்டி
அலைவார் திரிவார் ஊரூராய்
மெய்யில் எங்கும் வேல்பாய்ச்சி
வீதி முற்றும் புரண்டெழுவார்
தையை விட்டு வாய்மூடித்
தணலில் இறங்கி நடந்திடுவார்
செய்யற் குரிய தல்லாத
செய்யும் இவரைத் திருத்தாயோ? 53

குறிகள் இட்டுத் திரிந்தால்தான்
கும்பிட் டதற்குச் சான்றாமோ
நெறிகள் விலகிச் செல்லாமல்
நின்றால் அதுவே போதாதோ
பொறிகள் ஐந்தும் தம்வழியே
போக விட்டுப் பின்னாலே
குறிகள் இட்டுக் கொண்டுவிட்டால்
கும்பிட் டெழுந்த பலன்வருமோ? 54

கண்ணால் உன்னைக் காணவிலை
கையால் தொட்டுப் பார்க்கவிலை
எண்ணா திருக்கும் போதோநீ
இருப்ப தாகத் தோன்றவிலை
எண்ணித் தொழுமப் பொழுதெல்லாம்
எங்கோ தங்கி இருந்தபடி
மண்ணை ஆட்டும் வண்ணமெலாம்
மனத்த கத்தே காணு கிறேன். 55

சூரைக் காற்றைச் சீறவிட்டாய்
துணையாய் மழையைப் பொழியவிட்டாய்
வேரைப் பறித்து மரஞ்சாய்க்கும்
வெள்ளப் பெருக்கை ஏவிவிட்டாய்
யாரைக் கோபித் தையாநீ
அழிவுச் செயலைத் தொடங்குகின்றாய்
பேரைச் சொல்லித் தொழுதேன் என்
பெருமா உலகைக் காத்தருள்வாய்! 56

உருளப் பெறுமோர் அலை கடலில்
உயரத் தொங்கும் சுருக்குதனில்
மருளைத் தரும்பல் நிகழ்ச்சியினால்
மனங்க சந்தே உயிர்விடுவார்
அருளைத் தருமுன் திருவடியை
அடைந்தால் அவர்தம் இதயத்தே
இருளைத் தருமோர் எண்ணமுமே
இறைவா சேரா தருளாயோ! 57

துன்பம் வந்த போதெல்லாம்
துணையாய் உன்றன் திருவடியை
அன்பாய்ப் பற்றிக் கொண்டார்க்குன்
அருளால் ஆறப் புரிவாய்நீ!
இன்பம் உற்ற போதெல்லாம்
இசைத்துப் பாடி உன்னடியை
அன்பாய்ப் பற்றி நிற்பார்க்குன்
அருளைக் குறையா தளிப்பாயே! 58

இமய மலையின் உச்சியிலே
இருக்கின் ருய்நீ என்றுரைத்தார்
குமரி முனையின் கோடியிலே
குறுகி உன்னை நான்கண்டேன்

சமயம் சார்ந்து பிறரோடு
சண்டை யிட்டுக் கொள்ளார்முன்
இமயங் குமரி எங்கேனும்
இறைவா நீவந் திருப்பாயே! 59

மெச்சும் படிக்குத் தாம்கற்ற
மேலாம் தெய்வ மொழிகூறி
அர்ச்ச னைகள் பலசெய்தே
ஐயா உன்னை வழிபட்டார்
பச்சைத் தமிழில் இசைபாடிப்
பாதம் பணிந்தேன் என்முன்னே
இச்சை யோடு நீ வந்தாய்
ஏமாந் தாரே பகட்டாளர்! 60

வாடைக் காலம் கம்பளியை
வழங்கிக் குளிரைப் போக்கிடுவாய்
கோடைக் காலம் இளநீரைக்
கொடுத்துக் குளிர்ச்சி சேர்த்திடுவாய்
தேடிப் போகும் பொரு ளெல்லாம்
தேவைக் கீவாய் நெஞ்சரங்கில்
ஆடிக் களிக்கும் தேவா உன்
அருளைப் பாடிக் களிப்பேனே! 61

கண்ணில் நிறைந்த கடலானாய்
கருத்தில் நிறைந்த அமுதானாய்
விண்ணில் நிறைந்த வெளியானாய்
வெளியில் நிறைந்த ஒளியானாய்
மண்ணில் பொருள்கள் யாவுக்கும்
மன்னன் ஆன பெருந்தேவா!
எண்ணில் வந்தென் இடர்தீர்க்க
எளிதில் ஓடி வருவாயே! 62

அந்தி வானச் செம்மையில்உன்
அழகு மேனி தனைக்கண்டேன்
நந்தி கழுத்து மணியோசை
நாதத் துன்றன் குரல் கேட்டேன்
பந்தி வைத்த வெண்சோற்றில்
பரமா உன்றன் அருள்கண்டேன்
சிந்தை பறிக்கும் பூவினில்உன்
சிரிப்பைக் கண்டு கொண்டேனே! 63

பஞ்சும் தீயும் நெருங்குமெனில்
பற்றிக் கொள்ளும் அதுபோலென்
நெஞ்சும் உன்றன் திருவடியும்
நெருங்கிப் பற்றிக் கொண்டனவே
அஞ்சல் அஞ்சல் உனைக்காப்பேன்
யானென் றுரைத்தாய் என்தேவா
தஞ்சம் தஞ்சம் நீயென்று
தானே நானும் வந்துற்றேன். 64

வெள்ளிக் கிழமை யானாலும்
வியாழக் கிழமை யானாலும்
புள்ளி னங்கள் கூவியெழும்
பொழுதா னாலும் போயடைய
வெள்ளி முளைக்கும் இரவேனும்
வேறெந் நேரம் ஆனாலும்
உள்ளி உன்னைத் தொழுவார்க்கே
ஒன்றும் தீமை கிடையாதே! 65

ஞாலம் முற்றும் உன்னாலே
நடப்ப தென்று நான்கண்டேன்
காலம் அனைத்தும் உன்ஆணை
கடப்ப தன்றென் றறிகின்றேன்

மூல முதலே உனைநம்பி
முயல்வார் செயலைத் தீராகு
காலம் என்ன செய்துவிடும்?
கண்டம் என்ன செய்துவிடும்? 66

ஆளும் ஈசா உன்னருளை
அடைந்தார் செய்யும் செயலெல்லாம்
நாளும் கோளும் யாதேனும்
நன்ருய் முடியும்! பலனுண்டாம்!
சூழும் காலம் நன்றாகத்
தொடங்கும் செயல்கள் என்றாலும்
வீழும் என்ருல் நீயருளா
விடிலந் நேரக் குறையாமோ? 67

ஊரை வருத்திச் சேர்த்ததெல்லாம்
ஒன்ருய்க் கூட்டிப் பெருமையுடன்
பேரை நாட்டிக் கொண்டிடவே
பெரிதாய்க் கோயிற் பணிசெய்தோர்.
கூரை யிருக்கச் சுவரிருக்கக்
குடிய ருந்து போனதெலாம்
யாரை வைத்துச் சொல்வதவர்
யாரு மில்லை பெருமானே! 68

உழையா தேற்ற பொருளெல்லாம்
உருவா காமல் போயிற்றே
பிழையாய்ச் சேர்ந்த பணமெல்லாம்
பிழைக்கும் மருந்துக் காயிற்றே.
அழையா திருக்கும் போதேவந்
தன்பர்க் கருளைப் புரிவோனே
விழையா திருக்கப் புரிவாய், தீச்
செல்வம், வெல்லும் மனந்தந்தே! 69

ஆற்றல் என்னும் வேல்தந்தாய்
அச்சப் பேயைக் கொன்றேன் நான்
போற்றும் அறிவாம் வேல்தந்தாய்
பொய்யாம் இருளைக் கிழித்தேன் நான்
தோற்றும் அன்பாம் வேல்தந்தாய்
துன்பப் படையை வென்றேன் நான்
ஏற்றம் மிக்க உன்னருளை
ஏற்றேன் இன்பம் ஏற்றேனே! 70

எங்கோ நல்ல இடமொன்றில்
எப்போ தோஓர் நேரத்தில்
எங்கும் உள்ள இறைவா நீ
என்றன் முன்னே வந்துற்றாய்.
தங்கத் தேரில் வந்தாயோ
தாவும் பரியில் வந்தாயோ
எங்கி ருந்து வந்தாயோ
எதுவும் அறியேன் பெருமானே. 71

உருவாய் வந்து நின்றாயோ
ஒளியாய் வந்து நின்றாயோ
அருவாய் வந்து நின்றாயோ
யாதும் அறியேன் எம்பெருமான்.
இருளை யழித்து நீ வந்தாய்
இதய மலரில் குடி கொண்டாய்
அருளைக் காட்டி யாள்கின்றாய்
அறிந்த திதுவே பெருமானே. 72

நிலையில் லாமல் கதவில்லை
நீயில் லாமல் நானில்லை
தலையில் லாமல் வாலில்லை
தனையில் லாமல் உலகில்லை.

அலையின் கடல்சூழ் உலகத்தே
அனைத்து யிர்க்கும் முதல்வன்நீ
தலைவ ணங்கித் தொழுதுன்றன்
தாளை யடைவேன் என்பெருமான். 73

கோடி கோடி யாய்ச்சேர்ந்த
கொள்ளைச் செல்வம் இருந்தாலும்
ஆடிக் களிக்கும் ஆனந்தம்
அடையப் பெறுமோ எம்பெருமான்
கூடி உன்றன் திருவடியைக்
கும்பிட்டழுந்திக் கிடந்தினிது
பாடி மகிழும் இன்பந்தான்
பணத்தால் வருமோ பெருமானே. 74

கற்ற நூல்கள் ஆயிரமாம்
கல்விக் கடலென் பட்டமுமாம்
பெற்றுப் பயனென் எம்பெருமான்
பிழையாம் வழியிற் சென்றாலே
உற்றோர் ஏழை உன்தாளில்
உறுதி யாகத் தலைவைத்தால்
கற்ற கல்விப் பயனெல்லாம்
கடிதில் வந்து கிட்டாதோ? 75

அறிதற் கரியாய் என்றுன்னை
அறிஞர் பலரும் குறிக்கின்றார்
சிறியன் எனக்கோ நீ எளிதாய்த்
தெய்வக் காட்சி தருகின்றாய்
நெறியில் நின்று நல்லெணமே
நெஞ்சிற் கொண்டுன் திருவடியே
குறியாய்த் தொழுவார்க் கெந்நாளும்
கூடி மகிழும் கோமானே 67

கதிரின் சுழற்சி தனில்உன்றன்
கடமை தவறா நிலையுணர்ந்தேன்
அதிரும் வான மழைதனில்உன்
அருளை யுணர்ந்தேன் எம்பெருமான்
புதிரைப் போலே இரவெல்லாம்
பூத்தி ருந்து பகல்முழுதும்
எதிலோ மறையும் மீன்களிலுன்
இறைமை யுணர்ந்து தொழுதேனே! 77

உயிர்கட் கெல்லாம் உயிராகி
உள்ளே யிருக்கும் பெருமானே
பயிர்கட் கெல்லாம் நீராகிப்
பாயும் அருளுன் அருளாமே
அயரா தலையைப் பாய்ச்சிவரும்
ஆழக் கடல்போல் சூழ்ந்திருக்கும்
துயரார் உலகில் உன்னடியே
துணையாய்க் கொண்டு வாழ்கின்றேன். 78

ஆகும் எல்லாம் உன்னடியில்
அரும்பி முளைத்து வளர்வனவே
சாகும் எல்லாம் உன்னடியில்
சாய்ந்து வீழும் தகையனவே
ஆக எல்லாம் உன்னடியின்
ஆணை பெற்று நடப்பனவே
தேகம் பெற்ற பயனுன்றன்
திருப்பொன் அடியைப் பற்றுவதே! 79

கலங்கித் துயரால் அழும்போது
கண்ணீர் துடைக்கும் தாயானாய்
விலங்கின் வெறியைக் கொளும்போது
விலக்கும் அறிவுக் குருவானாய்

நலங்கெட்டாரின் சேர்க்கையினை
நறுக்கும் துணைவன் ஆனாய்நீ
மலங்கெட் டிருக்கும் பெருமானே
மனங்கொண் டேனுன் திருவடியே? 80

உள்ள வயலில் அன்பென்னும்
ஒருவித் திட்டேன் எம்பெருமான்
வெள்ளக் கருணை மழைபொழிந்தே
வித்தைப் பெரிதாய் வளர்த்தாய்நீ
அள்ளி இன்பம் நுகர்கின்றேன்
யாவும் உன்றன் அருள்தானே
கொள்ளக் கொள்ளக் குறையாத
கோதில் இன்ப வடிவோனே. 81

கலகம் செய்து மத வெறியால்
கண்ணி ழந்தோர் கால்வலிக்க
அலைந்து லைந்து தேடிடினும்
அகப்ப டாத பெருமானே
உலகம் முற்றும் ஆளுகின்ற
ஒருபே ரரசே உன்னடியே
விலக மனமற் றுள்ளேன்நான்
வேண்டுவ தெல்லாம் அருள்கின்றாய். 82

உன்றன் அடிமை ஆனபின்னே
உலக முற்றும் திரண்டாலும்
நின்றெ திர்க்கும் வலிபெற்றேன்
நெஞ்சின் அச்சம் பறக்கடித்தேன்
என்றும் நின்றன் திருவடியை
இனிக்கும் உறவாய்க் கொண்டவர்க்கே
ஒன்றும் இன்பம்; துன்பமெலாம்
ஓடி ஒழியும் பெருமானே! 83

உடலில் முற்றும் வேல்குத்தி
உறுத்தும் துன்பத் தோடிருப்பார்
திடலில் நெருப்புக் குழி அமைத்துத்
திரிந்து நடப்பார்; உண்ணாமல்
அடமாய்க் கிடப்பார்; எல்லாமுன்
அருளை அடையும் வழியாமோ?
இடரைக் களையும் பெருமானே
இப்பா விகளைத் திருத்தாயோ? 84

தம்மைத் தாமே துன்புறுத்தித்
தலைவா உன்றன் கருணைபெறச்
செம்மை யற்றோர் முயல்கின்றார்
திருத்தி நல்ல அறிவளிப்பாய்
நன்மை தருமுன் திருவடியை
நாளும் வணங்கித் தொழுதாலே
பொய்ம்மை எண்ணம் போய்த்தொலையும்
பொன்றா இன்பம் வந்திடுமே! 85

அன்பு கொண்டுன் திருவடியை
அதுவே கதியென் றடைந்தோர்க்குத்
துன்பம் வந்தால் உடன்வந்து
துடைக்கும் அன்புப் பேரொளியே.
என்பின் வந்து நிற்கின்றாய்
என்றும் காவல் புரிகின்றாய்
இன்பக் கடலே என்னரசே
என்றும் உன்னைத் தொழுவேனே. 86

கூடி வணங்கும் அடியாரின்
கூட்டம் கண்டு சிரிப்புடனே
ஆடி மகிழும் பெருமானே
அன்பர் நெஞ்சக் கோயிலெலாம்

தேடி யமரும் திருப்பேறே
தேவ தேவா உன்னடியே
நாடிக் கிடக்கும் அடியேனை
நலம்பு ரிந்து காப்பாயே! 87

உருளைக் கிழங்கு வறுவலிலே
உள்ள சுவையை நாவறியும்
அருளைத் தருமுன் திருவடியில்
அடையும் பேற்றை நானறிவேன்
இருளைப் போக்கி ஒளி சேர்க்கும்
இன்ப விளக்கே மதமென்னும்
மருளைச் சேரா வணமென் றன்
மனத்தைக் காப்பாய் பெருமானே. 88

இளமை முறுக்கும் உடல்வலிவும்
இருந்த போது பாடுபட்டு
வளமும் பொருளும் சேர்த்தேன் நான்
வளர்ந்து முதிர்ந்து நரம்பெல்லாம்
தளர்ந்து போன முதுமையிலே
தாய்போல் உதவிற் றதுபோலே
வளர்ந்த உன் றன் பேரன்பும்
வாய்த்த துணையாய் ஆயிற்றே. 89

ஐயா உன் றன் துணையிருந்தால்
அச்சம் போகும் வலுவுண்டாம்
மெய்யாய் உன் றன் அருளிருந்தால்
மிதிபட் டொழியும் துன்பமெலாம்
கையை நம்பி வாழ்வோர்க்குக்
கருணை புரியும் பெருமானே
பொய்யாம் சமய வழிவிலகிப்
பொற்றாள் பற்ற அருள்வாயே. 90

பயிரைச் சூழும் பூச்சியெலாம்
பறந்து மாயச் செய்மருந்தே
உயிரைச் சூழும் வினைத்துயரை
ஒழித்துத் தீர்க்கும் இன்னொளியே
உயரப் பறக்கும் புறாப்போலே
ஒன்றுங் கவலை யில்லாமல்
அயரா இன்பப் பெருவாழ்வை
ஆக்கித் தருவாய் பெருமானே. 91

நடப்ப தெல்லாம் நடந்திடவும்
நகரா தவ்வவ் விடங்களிலே
கிடப்ப தெல்லாம் கிடந்திடவும்
கீழே பற்றி நிற்பதெலாம்
கடப்ப தின்றி நின்றிடவும்
கருணை செய்தாய், உன்னாணை
கடப்ப தொன்றும் வையத்தே
காணப் பெறுமோ பெருமானே. 92

ஊற்று நீரில் குளிப்பதனால்
உடலுக் கின்பம் உண்டையா
காற்றுப் படியும் போதுடலில்
களிப்புச் சேர்வ துண்டையா
ஆற்று மணலில் படுத்திருந்தால்
அதுவும் இன்பம் தருமையா
போற்றும் உன்பொன் னடிநிழலில்
பொங்கும் இன்பம் மேலையா. 93

புத்தம் புதிதாய் மணம்செய்து
போகும் வழியில் மாப்பிளையை
மெத்தக் கொடிய பாம்பொன்று
மேவித் தீண்டிக் கொன்றதெனில்

அத்தை யல்தான் படுதுயரை
அளக்க லாமோ எம்பெருமான்
எத்த கைத்த துன்பெனினும்
இல்லா தொழிக்கும் உன்னருளே. 94

பச்சை மணியின் ஒளியோடு
பவள ஒளியும் ஒன்றாகி
இச்சைப் படுமோர் பேரொளியாய்
இன்பம் பாய்ச்ச வருதல்போல்
அச்சம் தவிர்த்து மனவுறுதி
ஆக்கந் தருமென் பெருமானே
துச்சம் துச்சம் துயரென்றே
சொல்ல வைத்தாய் அருளோனே. 95

மாதம் நோன்பு நோற்றவர்க்கும்
மனக்கண் ணில்நீ தெரிவதில்லை.
வேதம் கற்ற மேதைகட்கும்
வெளிபட் டேநீ வருவதில்லை,
காத காதம் தலந்தோறும்
கால்க டுக்க நடப்போர்க்கும்
ஆத ரிக்க வந்ததில்லை
ஐயா என்முன் வந்தாயே. 96

கொடுக்கும் பொருளால் உனைப்போற்றிக்
கோடிப் பெயர்கள் கூவிடினும்
படிக்கும் திறத்தால் துறைதோறும்
பரந்த நூல்கள் ஆய்ந்திடினும்
உடுக்கும் கடலை உடையாக
உலகின் முதல்வா உன்னருளைப்
பிடிக்கும் வாய்ப்பற் றிருந்தார்அப்
பேறு பெற்றேன் நான்தானே. 97

அம்மை என்பார் சிலருன்னை
அப்பன் என்பார் சிலருன்னை
அம்மை யப்பன் என்றுசிலர்
அழைப்பார் உன்னைப் பெருமானே
எம்மைப் படைத்த நீதானே
எங்கள் பெற்றோர் அவர் பெற்றோர்
தம்மை யெல்லாம் படைத்தாய்உன்
தன்னை எவ்வா றழைப்பதுவோ? 98

கண்ட தில்லை எனக்கூறிக்
கடவுள் இல்லை என்பார்க்கும்
உண்டிங் கொருவன் எனநம்பும்
உறுதி கொண்டு நிற்பார்க்கும்
கண்டு கொள்ள வேண்டுமெனக்
காட்சி கொடுத்த தில்லைநீ
மண்டும் அன்பால் எனக்கேநீ
மகிழ்ந்து காட்சி கொடுத்தாயே. 99

உள்ளம் உருக மெய்யுருக
உள்ளெ லும்பும் தானுருகக்
கள்ள மின்றி உன்னடியைக்
கட்டிக் கொண்டு தொழுதேன்நான்
வெள்ளக் கருணைத் திறத்தாலே
வேண்டும் வாழ்வைக் கொடுத்தாய்நீ
தெள்ளத் தெளிந்த ஆரமுதே
தேனின் இனிய பெருமானே. 100

பிறந்து மாயும் வாழ்வினிலே
பெருமா நானும் சலிப்புற்றேன்
பிறவா திறவா தொருநிலையில்
பணி என்னைக் காத்திடுவாய்

உறவா யுன்றன் திருவடியே
    உறுதி யாகப் பற்றிநின்றேன்
அறமாம் நெறியே காட்டியெனை
    அழைத்துக் கொள்வாய் பெருமானே! 101

அலுத்துக் களைத்த உடலுக்கே
    அன்பாய்க் குளிர்ந்த நிழல்தருமோர்
வலுத்த ஆல மரத்தைப்போல்
    வாழ்விற் சலித்த போதுனது
நிலைத்த ஒளிசேர் திருவடியின்
    நிழலைக் காட்டி எனையழைத்தாய்
பலித்த தென்றன் தவமென்றே
    பாதம் பற்றிக் கொண்டேனே! 102

அருளே திரண்டோர் உருவான
    அன்பு மலையே உலகத்தின்
இருளே பறக்கச் செயலாற்றும்
    இன்ப ஒளியே மதமென்னும்
மருளே ஒழியப் பரவிவரும்
    மாசில் அறிவே பரமென்னும்
பொருளே என்னை ஏற்பாயுன்
    பொற்பா தத்து நீழலிலே. 103

அண்டர் கோனே உன்னினும்மேல்
    ஆன அரசர் யாருளரோ
கண்ட மன்றம் அனைத்தும் நீ
    காணும் நீதிக் கடியன்றோ
தொண்டர் உள்ளத் தாமரையே
    தூயோய் உனது பீடமெனக்
கொண்டாய் தேவா உன்னடியார்
    கொண்ட நெறியே உயர்வன்றோ? 104

என்னை யடிமை கொண்டாய்நீ
என்று பெருமை கொண்டிருந்தேன்
என்னுள் விருப்பம் எல்லாம் நீ
எளிதாய்ச் செய்து முடிக்கின்றாய்
உன்னைத்தொழுத தல்லாமல்
ஒன்றும் செய்ய வில்லைநான்
என்னைப் பெருமைப் படுத்துகிறாய்
ஈசா இதனை மறவேனே. 105

தொன்னை சுழலும் வேகத்தில்
தொக்க நெய்யும் விழலில்லை
என்னைச் சுழற்று கின்றாய்நீ
யானும் உன்னைச் சேர்ந்ததனால்
பின்னிக் கீழே விழவில்லை
பெரியோய் உன்றன் தாளூற்ற
என்னைக் கைவிட் டிடமாட்டாய்
எனக்குத் தெரியும் தெரியுமிதே! 106

அச்சந் தவிர்த்தென் வாழ்வினிலே
அன்பைப் பொழியும் என்தேவா
நச்சுக் குடமும் அமுதாகும்
நல்லோய் உன்னைத் தொழுவார்க்கே
பச்சைக் குழந்தை போலென்னைப்
பாது காத்து வருகின்றாய்
இச்சைக் குரிய தாய்போலே
இருக்கும் உன்தாள் மறவேனே. 107

அன்பு வடிவம் நீயென்றார்
அன்பர்க் கன்பன் ஆனாய்நீ
இன்ப வடிவம் நீ யென்றார்
இனிக்கும் தேனின் இனிதானாய்

பொன்னின் வடிவம் நீயென்றார்
பொருளில் உயர்ந்த பொருளானாய்
என்னுள் ளத்தின் உள்ளரங்கில்
இருக்கும் மேலோய் உனைத்தொழுதேன். 108

எண்ணி உன்னைத் தொழுதடையும்
இயல்பில் லாத சிலரிங்கே
கண்ணில் லாத உடலெடுத்த
கடைகெட் டோரிற் கெட்டோராய்
புண்ணில் வடியும் சீழ்போலே
பொய்யாங் கருத்தை வளர்க்கின்றார்
மண்ணில் இவர்தம் உறவெனக்கு
வாயா வண்ணம் செய்தருள்வாய். 109

அலையில் மிதந்து சென்றிடலாம்
ஆகா யத்தில் பறந்திடலாம்
நிலையில் லாத பிறஉலகும்
நேரில் கண்டு திரும்பிடலாம்
தொலையில் உள்ள பொருளெல்லாம்
தோன்றக் கண்டு களித்திடலாம்
கலையில் வல்லார் உனைமட்டும்
காண முடியா தெனைப்போலே! 110

கடலின் நீரின் ஆவியிலே
கருமே கத்தை உருவாக்கி
திடலில் மழையாய்ப் பொழிவித்தாய்
செடியும் கொடியும் தழைத்தனவே
நடவும் தொழிலும் நடந்திடவே
நல்கு மழையில் உன்கருணை
வடிவைக் கண்டு தொழுதேற்றி
வணங்கி நின்றோம் பெருமானே. 111

நலிந்து நிற்கும் எளியாரை
நாளுங் கொடுமைப் படுத்திடவே
வலிந்து நிற்பார் தமையடக்க
வருமா வலியான் நீயன்றோ
மலிந்து நிற்கும் துயரெல்லாம்
மாய்த்துன் அடியார் நலங்காத்துப்
பொலிந்து நிற்கும் என்தேவா
போற்றி நின்றேன் பொன்னடியே! 112

எண்ணு முன்னே இடர்வந்தே
என்னைச் சூழக் கண்டேன்நான்
கண்ணின் முன்னே வழியொன்றும்
காணா துள்ளம் கலக்குற்றேன்
வண்ணங் கலந்த மின்னொளிபோல்
வந்த துன்றன் திருவடியே
நண்ண வந்த துயரெல்லாம்
நலிந்து மறைந்து போயினவே! 113

மெய்க்கும் பொய்க்கும் இடையேநான்
சிக்கித் தவிக்கும் போதெல்லாம்
கைக்குத் துணையாய் வந்தென்னைக்
கரையில் ஏற்றி விடுந்தேவா
தைக்கு விளைந்த நெல்மணியே
தாகம் தீர்க்கும் தீம்பாலே
துய்க்கும் இன்பப் பொருளெல்லாம்
தூயோய் நீதந் தருளினவே. 114

சிந்திக் கிடக்கும் சர்க்கரையில்
சிற்றெ றும்புக் கூட்டம்பார்
சிந்து பாடும் வண்டினத்தைச்
செந்தா மரைக்கு மேலேபார்

குந்திச் சோறு பொறுக்கியுண்ணும்
கூட்டக் காகம் மேட்டில்பார்
முந்தி உலகைப் படைத்தளித்த
முதல்வா உன்முன் என்னைப்பார்! 115

காசி சென்று தொழுதாலும்
கங்கை முழுகி வந்தாலும்
நேச மற்றோர் இதயத்தே
நிற்ப தில்லை ஈசாநீ
வாசம் செய்யும் இல்லத்தே
வணங்கும் அன்பர் உள்ளத்தே
தேசு மிக்க பொற்பாதம்
தேடி வரும்பே றுண்டாமே! 116

இல்லை யென்று சொன்னவர்கள்
இருக்கின் றாயென் றுரைத்தார்கள்
நல்லோ ரானார் எனநானும்
நம்பிக் கொண்டேன் எம்பெருமான்
எல்லாங் காசுக் காகத்தான்
என்று பின்னே கண்டறிந்தேன்
வல்லாய் உன்றன் மெய்கூட
வஞ்ச கத்தின் துணையாச்சே. 117

நம்பித் தொழுவார் பலரோடு
நானும் கோயில் சென்றிருந்தேன்
கம்பி யடைப்பின் வெளிநின்றேன்
கண்டேன் அங்கோர் பெருங்கூட்டம்
கும்பிட் டெழுந்தார் காயுடைத்தார்
குருக்க ளுக்குப்பணங்கொடுத்தார்
வெம்பித் திரும்பி வந்தேன்நான்
வெளியில் உன்னைக் கண்டேனே. 118

கூவிக் கூவி யார்ப்பரித்தார்
கும்பிட் டெழுந்தார் காயுடைத்தார்
பாவி மக்கள் எதைக்கண்டார்
பணத்தைக் கொடுத்தார் பூச்சொரிந்தார்
தேவா உன்னைக் காணாதே
சிந்தை நிறைந்து வெளிவந்தார்
ஆ ஆ! எல்லாம் பொய்வேடம்
ஐயோ ஈசா எனைக்காப்பாய். 119

இறைவா உன்னைக் காட்டுவதாய்
எவனோ சொன்னான் அதைநம்பி
மறைவாய் வாழும் அவன்குகைக்கு
மக்கள் சென்றார் பணங்குவித்தார்
உறைவாய் அன்பர் உள்ளத்தென்
றோதும் மொழியை யுணராமல்
இரையாய்ப் போனார் வஞ்சகத்திற்
கிவைதாம் என்ன விளையாட்டோ? 120

ஐயா உன்னைக் கண்டேன்நான்
அன்பாம் அமுதைக் குடித்தேன்நான்
மெய்யாய்ச் சொன்னால் இன்னும்என்
மேலாம் ஆசை தீரவில்லை.
உய்யக் கொள்ளும் உன்னடியில்
ஒடுங்கி யிருந்து நொடிதோறும்
பெய்யும் அமுதை உண்டிருக்கப்
பெரிதும் ஆசை கொண்டேனே. 121

உள்ளம் என்னும் சிற்றறையில்
ஒடுங்கி வந்து நீயிருந்தாய்
வெள்ளம் நிறைந்த குளம்போல
வெளியில் லாமல் உளமுழுதும்

கள்ளின் அமுதம் பெருகிற்றே
கண்ணின் ஒளியும் பெருகிற்றே
உள்ள மயிர்க்கால் தொறுமிகவே
ஊறி நிறைந்த தின்னமுதே. 122

நிலவு நிறையும் நாளன்று
நீலக் கடல்தன் அலைக்கையைக்
குலவப் பெரிதாய் நீட்டுதல்போல்
கோமான் உன்றன் அருள் நிறைவில்
கலவி பெறஎன் உளம்பொங்கும்
கையும் குவிந்து நீண்டுயரும்
வலிவுந் தெளிவும் உண்டாகும்
வாய்க்கும் இன்பம் பெரிதாமே. 123

இதய மலராம் பீடத்தே
ஏறி யிருந்தாய் எம்பெருமான்
உதய மான பேரொளியோ
உடலம் எங்கும் பரவியதே
புதிய தென்பும் எக்களிப்பும்
புகுத்த தொவ்வோர் உறுப்பிலுமே
எதிலும் எங்கும் எப்போதும்
இன்ப ஒளியே நிரம்பியதே. 124

ஐயா உன்றன் புகழ்பாடி
யானோர் கவிதை நூல்செய்தேன்
மெய்யாம் என்றன் இறையுணர்வின்
மேன்மை புகழ்ந்தார் ஓரடியார்
தெய்வத் தமிழில் எனக்குள்ள
திறமை புகழ்ந்தார் ஒருபுலவர்
உய்யும் உணர்வும் தமிழ்த்திறமும்
ஒருங்கு தந்தோன் நீயன்றோ? 125

இழிவாம் மனத்தின் வயப்பட்டே
 எண்ணின் நாணம் மிகவிளைக்கும்
பழியும் பாவச் செயலும்நான்
 பண்டு புரிந்தேன் எம்பெருமான்
எழிலும் ஒளியும் மிகவுடைய
 இனிய அடிவைத் தெனதுளத்தே
அழியாப் பொருளே வந்தமர்ந்தாய்
 யானும் தூயேன் ஆனேனே. 126

நிலையில் லாத பொருளெல்லாம்
 நிலைக்கும் என்று நினைத்திருந்தேன்
அலையில் நீந்தி ஆனந்தம்
 ஆகத் திரிந்த மீனெல்லாம்
வலையில் சிக்கி மாய்ந்ததுபோல்
 வாழ்வு சாவிற் சிக்கியதே.
தலைவா உன்றன் தாளொன்றே
 தங்கும் என்று பணிந்தேனே. 127

வாழ்வைத் தேய்த்துக் காலமெனும்
 வண்டி உருண்டு போகுதையா
ஏழு குதிரை பூட்டியதாம்
 இந்த வண்டி தனைநிறுத்த
ஆளும் இல்லை வழியுமிலை
 யாவும் தேய்ந்து மாயுதையா
பாழாம் அந்தப் பாதையிலே
 பரமா என்னைக் கிடத்தாதே! 128

எங்கும் நிறைந்த பெரும்பொருளே
 இறையே உன்னைத் தொழுததன்பின்
எங்கோ சந்து பொந்துகளில்
 இருப்ப தாகப் பிறருரைக்கும்

மங்கு சிறிய தெய்வமெலாம்
மதித்துப் பணிந்து வணங்கேன் நான்
பொங்கும் உன்றன் அருளிருக்கப்
பொருளற் றவற்றைப் பணிந்திடவோ? 129

அந்தத் தெய்வம் சக்தியுள
ததனைப் பணிவோம் என்றிடுவார்
இந்தத் தெய்வம் கீர்த்தியுள
திதனைப் பணிவோம் என்றிடுவார்
எந்தத் தெய்வம் ஆனாலும்
இறைவா உன்றன் அருளின்றேல்
அந்த ரத்தே பறந்துவிடும்
அதையேன் பணிய வேண்டுவதோ? 130

இன்ப வடிவம் கொண்டென்றன்
இதய மலரில் வீற்றிருக்கும்
அன்புப் பொருளே பெருவெளியில்
அறிவின் ஒளியாய்ப் பரந்தவனே
என்புந் தோலும் கொண்டமைந்த
ஏழை யேனைத் திருவடியின்
முன்பு வைக அருள்புரிவாய்
முழுதும் இன்பம் கொள்வேனே! 131

ஒப்பில் லாத முழுமுதலே
உன்னை யன்றி எவ்விடத்தே
தப்பில் லாத நலங்கிடைக்கும்
தாங்கிக் காக்க வந்திடுவாய்
செப்பின் சிலையைத் தெய்வமெனச்
சிந்தை கொள்ளும் மடமையெலாம்
இப்போ தில்லை மெய்ப்பொருளே
என்பால் அன்பு கொண்டிடுவாய். 132

நீரும் நெருப்பும் நீயென்றார்
நிலமும் வானும் நீயென்றார்
ஆரும் காற்றும் நீயென்றார்
அம்பொற் கதிரும் நீயென்றார்
மாறும் மதியும் நீயென்றார்
மன்னும் உயிரும் நீயென்றார்
கூறு கூறாய் நீபடைத்த
கோலப் பொருள்கள் இவையன்றோ? 133

எல்லாங் கடந்த பொருளென்றே
எண்ணிக் கொண்டேன் நானுன்னை
எல்லாப் பொருளின் உள்ளேயும்
இருக்கும் உண்மை பின்னறிந்தேன்
எல்லாம் உன்றன் திருக்குறிப்பால்
இயங்கும் உண்மை உணர்கின்றேன்
எல்லாம் வல்ல பெருமானே
என்னுள் ளத்தும் உள்ளாயே. 134

செக்கச் சிவந்த திருவாயும்
சிறிய கரிய கண்மணியும்
ஒக்கப் பொருந்து செவ்விதழின்
ஊடே மின்னும் வெண்பல்லும்
மிக்கப் பெரிய தனமிரண்டும்
மெல்லி தென்னும் சிற்றிடையும்
தொக்க எழிலின் தோகையரைத்
தூயோய் மறுக்க அருள்புரிவாய். 135

இருக்கும் வீட்டில் விளக்கேற்றி
இன்பந் தந்து நலம்பெறவும்
பிறக்கும் பிள்ளை குட்டிகளைப்
பேணி வளர்த்துக் காத்திடவும்

பொறுக்கும் மனமும் அன்புணர்வும்
 பொருந்து மனைவி ஒருத்திதனை
மறுக்கும் அல்லேன் பிறமாதர்
 மையல் வேண்டேன் பெருமானே! 136

ஈயும் கொசுவும் வளையெலியும்
 எறும்பும் பாம்பும் கொடுந்தேளும்
பாயும் கெட்ட சொறிநாயும்
 பரவிக் கிடக்கும் சாக்கடையும்
வாயும் சுற்றுப் புறமெனினும்
 வாழ்வேன் அங்கே எம்பெருமான்
தூய இடமாய் மாறாதோ
 துணைநீ செய்ய வந்துவிட்டால்! 137

மன்னும் உன்றன் அருள்வெள்ளம்
 மாந்திக் களிக்க நினைப்போர்க்குப்
பொன்னும் பொருளும் போலேநான்
 பொருந்தி உதவி செய்திடுவேன்
பின்னும் பின்னும் வழங்கிடினும்
 பெருகி வழியும் திருவருளை
உன்னும் அவர்கள் எய்துவதால்
 ஊறொன் றில்லை பெருமானே. 138

உன்னை வணங்கி உன்னடியே
 ஒன்றிக் கிடக்கும் திருத்தொண்டர்
என்னை நாடி வருவாரேல்
 எலும்பு தேயத் துணைபுரிவேன்
பொன்னைத் தெய்வம் போல் மதித்துப்
 போற்றா துன்னைத் திரிவாரைச்
சின்ன தூசாய்க் கருதிடுவேன்
 சேரேன் அவரோ டெம்பெருமான். 139

எண்ணி எண்ணி உன்னருளை
எய்திக் களித்த நிலைதனிலே
வண்ணத் தமிழில் நான்பேசும்
வார்த்தை யெல்லாம் கேட்டிருந்தோர்
அண்ணன் ஏதோ பித்தேறி
ஆடு கின்றான் என்றுரைத்தார்
கண்ணின் இனிய பெருமானே
கருத்தி லாரைத் திருத்தாயோ. 140

பாரில் உள்ள இடமெல்லாம்
பரந்துள் ளாயென் றோர்கில்லார்
ஊரில் உள்ள கோயிலெல்லாம்
உள்ளாய் நீ யென் றோடுகின்றார்
நேரில் வருவாய் உள்ளத்தே
நேயம் மிகுத்தால் என் றறியார்
தேரில் வருவாய் நீ யென்றே
திருவி ழாவிற் கூடுகின் றார். 141

காவிட் டுயிர்கள் பலவற்றைக்
காப்பாய் எம்மை எனக்கூவிப்
பூவிட் டுன்னை நாள்தோறும்
போற்றி செய்தல் அன்பாமோ
ஆவிக் கினிய வழிகாட்டும்
ஐயா உன்றன் திருவடியைப்
பாவித் துளத்தே வழிபட்டால்
பரமா னந்தம் கிட்டாதோ? 142

காற்றிற் கலந்த இசைபோலே
கண்ணிற் புகுந்த ஒளிபோலே
நாற்றிற் பச்சை நிறம்போலே
நல்லேன் உளத்திற் கலந்தோனே

போற்றி உன்னை வழிபட்டுப்
பொன்றா நிலையை யெய்திடவே
ஆற்றி இருந்தேன் எம்பெருமான்
அதுவே எனக்கு நீயருள்வாய். 143

அன்பே அன்பே உயிரன்பே
அறிவே அறிவே நல்லறிவே
இன்பம் இன்பம் பேரின்பம்
எய்த உன்னைக் கூடினனே.
முன்போ பின்போ உனையறியேன்
முற்றும் உன்னை யறிந்ததன்பின்
முன்பும் பின்பும் அறியாத
முடிவில் இன்பம் பெற்றேனே. 144

காணும் பொருளில் மயலாகிக்
கனவும் நினைவும் அதுவேயாய்த்
தோணும்படிக்கே எண்ணத்தைத்
தொடர விட்டோர் உள்ளத்தை
வீணென் றெண்ணி விட்டாயோ
வீடென் றெண்ண மறந்தாயோ
காணென் உள்ளம் உன்வீடாய்க்
காட்சி யளிக்கும் பெருமானே. 145

கேட்கும் பேச்சில் மயலாகிக்
கீழாம் அந்தப் பேச்சினையே
வேட்கும் எண்ணம் உடையாராய்
விரையும் மாந்தர் உள்ளத்தை
ஆட்கொள் கின்ற எண்ணமுனக்
கற்றுப் போச்சோ பெருமானே.
நாட்கள் தோறும் உன்னடியை
நாடும் பேச்சே நான்கேட்பேன். 146

உண்ணும் உணவில் விருப்புற்றே
ஓடிப் புதிது புதிதாக
உண்ணத் தலைப்பட் டந்நினைப்பே
உடையார் நெஞ்சைக் கடையாக
எண்ணிப் பேசா திருந்தாயோ
என்றன் இறைவா உன்னடியின்
வண்ண அமுதை யல்லாமல்
வாரி யுண்ண நினையேனே. 147

பூவும் புகையும் பொடிகளும்மேற்
பூச்சும் தருமவ் வாசத்தே
யாவும் இன்பம் உள்ளதென
ஆசை யோடு நேசிப்பார்
மேவும் இடத்தை வெறிதென்றே
விட்டு விட்டாய். நானோ என்
தேவா உன்றன் அடிமலரின்
திரும ணத்தை உயிர்ப்பேனே. 148

கண்ணுக் கினிய பெண்களையே
காமுற் றவர்பின் ஓடிடுவார்
எண்ணந் தன்னில் சிறிதிடமும்
ஏற்க மறுத்தாய் என்னிறைவா
மண்ணும் விண்ணும் காத்தளிக்கும்
மன்னன் உன்றன் தோள்சேர்ந்து
நண்ணும் இன்பம் தனையன்றி
நான்வே றெதுவும் நாடேனே! 149

சிந்தித் துன்னைத் தொழுதிடவே
சிறிதும் விருப்பம் இல்லாமல்
நிந்தித் திருப்பார் உள்ளத்தை
நீயும் வெறுத்து விட்டாயோ?

அந்தி சந்தி தொறுமுனையே
அடியேன் உள்ளக் கோயிலிலே
வந்திக் கின்றேன் என்னுளத்தே
வந்த மர்வாய் பெருமானே! 150

எங்கோ உள்ள செங்கதிரோன்
இனிய ஒளியை உலகுயிர்கள்
பங்கில் சேர்த்து வாழ்வளிக்கும்
பான்மை கண்டேன் எம்பெருமான்.
எங்கோ புலனுக் கெட்டாமல்
இருக்கும் நீயுன் அடியாரின்
பங்கில் அருளைச் சேர்த்திடுவாய்
பணிந்து தொழுதேன் பரம்பொருளே. 151

காணு முன்னே காண்பதற்கே
கருத்தில் ஆவல் கொண்டிருந்தேன்
காணக் கிடைத்த பொன்னடியைக்
கண்ணில் ஒற்றிக் கொளநினைத்தேன்
பேணும் இறையே அதன்பின்னே
பிரியா தொட்டிக் கொள நினைத்தேன்
வேணும் என்று நினைத்ததெலாம்
விரும்பித் தந்தாய் அருளோனே! 152

இருளே நீங்கி ஒளிவெள்ளம்
இதயத் துள்ளே பெருக்கெடுக்க
அருளே உன்றன் திருக்காட்சி
அடையும் பேறு பெற்றேன்நான்
பொருளே வேறு கருதாமல்
பொற்றாள் ஒன்றே நினைவாகத்
தொழுதேன் பாடித் தொழுகின்றேன்
தொழுவேன் இனிஎக் காலமுமே! 153

அழுதேன் உன்னை நினைந்தொருகால்
ஐயா என்றன் துயர்துடைத்தாய்.
தொழுதேன் உன்றன் அடியிரண்டும்
துணையாய் என்றன் அருகடைந்தாய்.
துளிதேன் எனினும் சுவைபெரிதே
தூயோய் உன்றன் அருள்செறிந்த
ஒளிதான் சிறிதே பாய்ந்திடினும்
உள்ளம் வெள்ளப் பெருக்காமே. 154

அறிவில் லாமல் நான்கொண்ட
ஆண வத்தால் பலசெய்தேன்
நெறியன் றேனும் பெருமானே
நீம னத்தில் கொள்ளாதே.
குறியாய் உன்றன் திருவடியைக்
கொண்டு தெய்வத் தொண்டுசெயும்
வெறியைக் கொண்டேன்!; மனத்திமிரை
விலக்கி விட்டேன் காத்தருள்வாய்! 155

அவத்தைச் செய்தேன்; நெறிமுறையே
அழித்தேன்; பொய்யை மெய்யென்றேன்
இவற்றைப் போலே எத்தனையோ
இன்னும் தீமை பலசெய்தேன்.
தவற்றுக் கெல்லாம் என்னைநீ
தண்டிப் பாயென் றறிந்துள்ளேன்.
அவற்றுக் கெல்லாம் அப்பால்உன்
அருளைப் பொழிய மாட்டாயோ! 156

செய்த செயல்கள் என்னைமிகச்
சிறிய னாக்கி விட்டதனால்
எய்தக் கருதும் இலக்கைநான்
எய்தொ ணாது பிறரெலாம்

வைது தடையாய் நிற்கின்றார்
வழியில் லாமல் தவிக்கின்றேன்.
மெய்யாம் பொருளே உனையல்லால்
வேறார் என்னை உய்விப்பார்! 157

அறியா திருந்த நாளெல்லாம்
ஐயா உன்னைத் தூற்றினேன்
அறிவு வந்த பின்னாலே
அன்போ டேற்றிப் போற்றினேன்.
நெறியும் முறையும் உனைநம்பி
நினைத்துத் தொழுத பின்னாலே
குறியாய் வழியாய்க் கொள்கையாய்க்
குணமாய்க் கொண்டேன் பெருமானே! 158

இறைவன் அருளைப் பெறுதற்கே
இவனோ தகுதி யுள்ளானென்
றறையு மாறு சொன்னார்ஓர்
அடியார், ஐயா, என்பாலே
குறையுண் டென்றால் அதுகளையும்
கொள்கை யுனக்கு வேண்டாமோ
முறையோ என்னைக் கைவிடுதல்
முதல்வா ஆற்றேன் ஆற்றேனே! 159

உன்றன் பெருமை யறியாமல்
ஒழிந்த நாட்கள் எத்தனையோ?
உன்றன் அருளை வேண்டாமல்
உருண்ட நாட்கள் எத்தனையோ?
என்றன் பிழையைப் பொறுத்தருள்வாய்.
இனிதுன் அருளைப் பொழிந்திடுவாய்.
என்றும் இனிமேல் உன்னடியே
ஏற்றிப் பணிவேன் பெருமானே! 160

பழிக்கஞ் சாமல் நான்செய்த
பாவத் தொகுப்பின் கறையெல்லாம்
அழிக்க உன்றன் துணையைத்தான்
ஐயா வேண்டிக் கிடக்கின்றேன்.
விழித்த கண்ணோ டொருமடுவில்
விழுமோர் மூடன் போல்பாவக்
குழிக்குள் விழுந்த எனைக்காக்கக்
கொஞ்சம் கருணை புரிவாயே! 161

அறியா தொருவன் பிழைசெய்தால்
ஐயா உன்றன் அருட்பாங்கால்
நெறியில் நிற்கும் படிகாப்பாய்
நீஎன் றறிவேன் பெருமானே.
அறிவி ருந்தும் ஆணவத்தால்
அடியேன் செய்த பிழையெல்லாம்
வெறியில் மயங்கிச் செய்ததென
விடுவாய் கருணை புரிவாயே! 162

மண்ணின் உலகம் பரந்ததுதான்
மக்கள் தொகையும் கோடிகள்தான்
புண்ணுற் றொருவன் மனம்வாடிப்
புழுங்கித் தவிக்கும் போதவனைக்
கண்ணுற் றுதவும் உளத்தைத்தான்
காணத் துடித்தேன் எம்பெருமான்
அண்ணல் உன்சீர் அடியன்றி
யாங்குப் புகலென் றடைவேனோ? 163

என்னைக் காக்கும் என்னிறைவா
என்றும் என்றன் அருகிருப்பாய்
உன்னை யன்றி ஒருதுணையும்
உலகில் எனக்குக் கிடையாதே.

பொன்னை நம்பி வாழ்வோரும்
பொருளை நம்பி வாழ்வோரும்
என்னைத் திரும்பிப் பார்ப்பாரோ
இறைவா நீயே எனைக்காப்பாய்! 164

மண்ணும் நீரும் உன்வடிவம்
வானும் காற்றும் உன்வடிவம்
விண்ணில் சுழலும் செங்கதிரும்
வெள்ளை நிலவும் உன்வடிவம்
எண்ணில் உயிர்கள் அத்தனையும்
எரியும் நெருப்பும் உன்வடிவம்
கண்ணில் தெரியும் கருணைஒளி
கடவுள் உன்றன் திருவடிவம். 165

ஓடும் ஆற்றின் கரைமீதே
உட்கார்ந் திருந்தும் தாகத்தால்
வாடும் ஒருவன் போல்நானும்
வழியும் கருணை வெள்ளத்தை
நாடும் அறிவில் லாதிங்கே
நலிந்து கிடந்தேன் எம்பெருமான்
ஆடும் உன்றன் திருவடியை
அடைந்தேன் இனிமேல் விடுவேனோ? 166

தந்தை யுண்டு தாயுண்டு
தம்பி மார்கள் பலருண்டு
சிந்தை இனிக்கப் பழகிடவே
சேரும் தோழர் குழுவுண்டு
வந்து மணந்த துணையுண்டு
வாய்த்த மழலைப் பேறுண்டு
செந்தேன் ஒழுகும் திருவருளும்
சேர்ந்தால் எல்லாம் பயனுண்டே! 167

மலையைப் பார்த்தேன் முன்னொருநாள்
மலைத்து நின்றேன் எம்பெருமான்
அலையை வீசும் கடல்கண்டே
அகம்வேர்த் திருந்தேன் எம்பெருமான்
நிலையைத் தருமுன் திருவருளே
நிறையப் பெற்ற பின்னாலே
மலையும் கடலும் சிறிதாக
மனத்தின் ஊக்கம் பெரிதாச்சே! 168

மண்ண கத்தின் பரப்பைநான்
மதித்தேன் பெரிதாய் ஒருகாலம்
விண்ண கத்தின் விரிவைநான்
வியந்தேன் பெரிதாய் ஒருகாலம்
வண்ணப் பெருமான் உன்னருளே
வாய்க்கப் பெற்ற பின்னாலே
விண்ணும் மண்ணும் சிறிதாக
விரிந்த தென்றன் மனவெளியே! 169

தொலைவில் தொலைவில் நெடுந்தொலைவில்
தூய கதிரோன் இருந்தாலும்
கலையும் இதழால் மலரும்பூக்
களிக்கத் தொட்டு மகிழ்கின்றான்.
விலகும் பற்றால் நெஞ்சகப்பூ
விரிந்து மலரும் போதுன்றன்
அலகில் கருணைத் திருவடியின்
அருள்சேர் ஒளியால் எனைத்தொடுவாய்! 170

எதிர்த்தா ரேனும், நீயொருவன்
இல்லை என்பா ரேனுமுனை
மதித்தா ரிடையே பழித்துரைத்து
மனத்தை வருத்து வாரேனும்

கொதித்தங் கவரை யழித்திடவோ
குடிகெட் டிடவோ செய்யாய்நீ
புதுத்தேன் வெள்ளம் போற்கருணை
பொழிவாய் அவரும் வாழ்வாரே! 171

பொய்மை வழியில் மனமென்னும்
பொல்லாக் குரங்கைச் செலவிட்டால்
செய்ய லாகாச் செயலெல்லாம்
செய்து துயரை மிகுவிக்கும்
ஐயா உன்றன் காலடியில்
அடிமை யானால் அதுபோதும்
மெய்யாய் என்றன் குடியோடு
மேன்மை யடையச் செய்திடுவாய். 172

சுவையோ டன்னை வீட்டகத்தே
சுட்ட உணவை விரும்பாமல்
எவையோ தெருவில் விற்பதெலாம்
இனிதென் றேங்கும் குழந்தையெனக்
குவைபோல் நிறைந்த உனதருளைக்
குறியாய்க் கொள்ளா தெங்கெங்கோ
எவையோ தேடித் திரிவாரின்
இயல்பை என்னென் றுரைப்பேனே. 173

ஐயா உன்னைத் தொழுதிடலும்
அருளைப் பெற்றுப் பிழைத்திடலும்
மெய்யாய் அறிவேன் அல்லாமல்
வேறொன் றறியேன் மற்றிங்கே
பொய்யாய்ச் சிலரோ அற்புதங்கள்
புரிவோம் என்று புறப்பட்டார்
தெய்வம் நீயல் லாதொருவர்
செய்யும் ஆற்றல் உடையவரோ? 174

இரண்டு கையும் குவித்துன்னை
ஏற்றித் தொழுது வெள்ளமெனத்
திரண்டு வருமுன் அருட்புனலில்
திளைத்து மூழ்கிக் கிடக்காமல்
முரண்டு செய்யும் மனிதருடன்
முட்டி மோதிக் கொண்டிவணே
புரண்டு கிடக்கும் எனக்குன்றன்
பொற்றாள் காட்டி யருள்வாயே. 175

கண்டேன் கண்டேன் திருவடியைக்
கையால் பற்றிக் கொண்டேனே
உண்டேன் உண்டேன் திருவருளாய்
ஒழுகும் அமுதத் தேனினையே!
பண்டே யுற்ற துன்பமெலாம்
பறந்து மறைந்து போயினவே
கொண்டேன் கொண்டேன் என்றென்றும்
குறையா இன்பங் கொண்டேனே. 176

பள்ளங் கண்டு நீர்பாயும்
பஞ்சு கண்டு தீப்பாயும்
உள்ள காற்றும் இல்லாத
ஓரி டத்தே தான்பாயும்
கள்ள மற்ற என்னுளத்தே
கருணை மிக்க தேவாநீ
வெள்ளம் போலே பாய்ந்தோடி
வீற்றி ருக்கக் கண்டேனே. 177

வண்ணம் பலவாம் எழில்காட்டும்
வடிவம் பலவாம் யாவையுமே
கண்ணைத் திறந்து பார்த்தால்தான்
காட்சி தருமென் பெருமானே.

விண்ணின் ஒளிபோல் அணுவுள்ளும்
    விரிந்து பரந்து நிற்குமுனை
எண்ணு முளத்தின் உள்ளேநீ
    இருப்பாய் காட்சி கொடுப்பாயே. 178

வெள்ளை முத்துப் பல்தெரிய
    விரிந்து சிரிக்கும் செவ்வாயும்
கள்ளை வெல்லும் மொழிபேசும்
    கரிய மணிகள் உருள்விழியும்
கொள்ளை கொள்ள வயமிழக்கும்
    குற்றம் புரிய வொட்டாமல்
உள்ளந் தன்னை ஆட்கொள்ள
    உரிய இறைவா வருவாயே. 179

மாசில் லாத மணிக்குன்றே
    மனத்தில் உறையும் அருளரசே!
பேசப் பேச வளர்ந்துமிகப்
    பெரிதாய்த் தோன்றும் உன்புகழே
நேசங் கொள்ளக் கொள்ளமிக
    நெருங்கி வருமுன் திருவடியே
பூசை செய்யச் செய்யமிகப்
    பொங்கி மகிழும் என்னுளமே! 180

அழுதேன் அழுதேன் தாள்பற்றி
    அகன்ற தெல்லாத் துன்பமுமே
தொழுதேன் தொழுதேன் திருவடியைத்
    தோன்றிற் றின்பப் பேரமுதே
முழுதும் முழுதும் அதைப்பருக
    முனைந்தேன் பொற்றாள் அடிநிழலே
வழியென் றெண்ணிக் கிடக்கின்றேன்
    வாழ்த்தி யருள்வாய் பெருமானே. 181

எங்கோ இன்ப உலகுளதாம்
எழில்மங் கையர்வந் தாடுவராம்
அங்கே போக வேண்டுமென
ஆசைப் படுவார் பிறரெல்லாம்
அங்கே போயும் கூத்தியரை
அணையும் ஆசை எனக்கில்லை.
மங்கா உன்றன் திருத்தாளே
மனத்திற் கொண்டேன் பெருமானே. 182

இம்மை மறுமை என்பதெல்லாம்
இல்லா திருக்கும் இடமொன்றே
அம்மை யப்பன் பிள்ளையென
யாரும் அங்கே உறவில்லை
எம்மை யாளும் ஒருதலைவன்
இருப்பாய் நீயுன் பொன்னடிகள்
தம்மைப் பற்றி நின்றிடுவோம்
தண்மை யருளைப் பொழிந்திடுவாய். 183

கோடி முனையில் விசையழுத்தக்
கூடத் தெரியும் விளக்குக்கும்
ஓடி மின்கள் பாய்வதற்கே
ஒன்றோ இரண்டோ நொடிசெல்லும்
நாடி உன்னைக் கைதொழுதால்
நல்லாய் நீவந் துள்ளமுற
ஆடி அசையும் சிறுபொழுதும்
ஆகா தாகா துண்மையிதே! 184

அழியும் உலகம் முழுதெனினும்
அழியா திருப்பாய் நீ ஐயா
அழியா திருக்கும் உன்தாளை
அகத்தில் சேர்த்துக் கொண்டுவிட்டால்

அழியா திருப்பேள் நானுமென
    ஆசைப் பட்டேன் பெருமானே
அழியா வரம்நீ தந்தருள
    அடியைத் தந்தால் அதுபோதும். 185

வெய்யில் காய்ந்த ஓரிடத்தில்
    வெள்ளந் திரள மழைபொழியும்
பொய்யும் தீதும் பொயொருநாள்
    புதிய உண்மை வந்துலவும்
மெய்யும் நலமும் பார்முழுதும்
    மேன்மை யடையும் அந்நாளில்
ஐயன் திருத்தாள் அடிபணிந்தோர்
    அனைவ ருக்கும் பயன்கிட்டும். 186

உள்ளம் அன்பால் உருகிற்றே
    உருகி அமுதாய்ப் பெருகிற்றே
வெள்ளம் பெருகப் பெருகஉடன்
    விளைந்த தெல்லாம் மெய்யன்பே!
கள்ளம் அற்ற மெய்யன்பில்
    கனிந்த தெல்லாம் உன்னருளே!
உள்ளும் புறமும் இருந்தாளும்
    ஒருவா என்றன் பெருமானே! 187

நெஞ்சம் முற்றும் உன்னினைவே
    நிறையக் கொண்டேன் எம்பெருமான்
தஞ்சம் என்றுன் திருவடியே
    தலைமேற் கொண்டேன் எம்பெருமான்
அஞ்சும் நிலையைப் போக்கியஉன்
    அருளைப் போற்றிப் புகழ்ந்தேன்நான்
மிஞ்சும் அன்பால் உன்பணியே
    மேற்கொண் டொழுகு கின்றேன்நான். 188

மண்ணில் உன்றன் அருளாலே
மலரும் இன்பக் காட்சியெலாம்
எண்ணி யெண்ணி உனைப்பாடி
என்பும் உருகிப் போச்சையா!
அண்ணல் உன்றன் அருள்பெறவே
ஆர்வங் கொண்டு துடித்திருந்தேன்.
எண்ணம் பலித்த தினிமேலே
இல்லை கவலை எனக்கொன்றே! 189

வாயைப் படைத்துத் தந்தாய்நீ
வாழ்த்தி வாழ்த்தி உனைப்பாட
தூய உன்றன் புகழ்கேட்கத்
துணையாய் இரண்டு செவிதந்தாய்.
பாயும் உன்றன் அருள் வெள்ளம்
பரவ விரிந்த மனந்தந்தாய்
ஆயுங் கண்ணும் நல்லறிவும்
அளித்தாய் உன்னைக் கண்டிடவே! 190

உலகப் பொருள்கள் உன்னுடைமை
உயிர்கள் யாவும் உன்னடிமை
மலரை யொத்த திருவடியை
வணங்கி நிற்றல் எம்கடமை
நலமும் மகிழ்வும் எமக்கருளி
நாளுங் காப்பாய்; உன்பெருமை
பலவும் சொல்லிப் புகழ்பாடிப்
பணிந்து நின்றோம் எம்பெருமான். 191

அடைதற் கரிய தென்றிடுவார்
ஐயா உன்றன் திருவடியே!
அடைதற் குரிய தென்றிடுவார்
ஐயா உன்றன் திருவடியே!

அடைதற் கியன்ற தென்றாலே
ஐயா உன்றன் திருவடியே!
அடைதற் பெற்றார் அகலார்பின்
ஐயா உன்றன் திருவடியே! 192

அரியாய் உன்னை அறிந்திடவே
அயரா தொழியா தேமுயன்றேன்
பெரியாய் உன்னைக் கண்டறியும்
பேறு கிட்டா அந்நிலையில்
புரியா மனத்தின் தவிப்பாலே
பொங்கிப் பித்துப் பிடித்தவனாய்
எரியும் தீயில் விழச்சென்றேன்
எதிரில் வந்து தடுத்தாண்டாய். 193

ஒல்லாய் உன்னை அறிந்திடவே
ஓயா தொழியா தேமுயன்றேன்
வல்லாய் உன்னைக் கண்டறியும்
வாய்ப்புக் கிட்டா அந்நிலையில்
பொல்லா மனத்தின் தவிப்பாலே
பொங்கிப் பித்தம் கொண்டவனாய்
கொல்லுங் கடலில் விழச் சென்றேன்.
குறுக்கில் வந்து தடுத்தாண்டாய். 194

ஒன்றற் கரியாய் உனையறிய
ஓயா துறங்கா தேமுயன்றேன்
அன்றக் காலை அறியும்பே
றடையா திருந்த அந்நிலையில்
பொன்று மனத்தின் தவிப்பாலே
பொங்கிப் பித்துற் றலைந்தவனாய்க்
குன்றி னுருண்டு விழச்சென்றேன்
குறுகி வந்து தடுத்தாண்டாய். 195

அடுக்க டுக்காய் அண்டங்கள்
அவற்றிற் பலவாம் உயிரினங்கள்
தொடக்கம் செய்வாய்; காத்திடுவாய்;
தோன்றிய தெல்லாம் காலத்தே
ஒடுக்கம் கொள்ளச் செய்திடுவாய்;
உன்றன் தொழிலோ பெரிதையா.
உடுக்கும் உடைக்கும் சோற்றுக்கும்
ஓடுந் தொழிலே என்தொழிலாம்! 196

வேட்டு வேட்டுப் பாடியுனை
விருப்ப மெல்லாங் கூறிவிட்டேன்
கேட்டுக் கேட்டுப் புகன்றதெலாம்
கிட்டப் புரிவாய் பெருமானே
நாட்டங் கொண்ட தெய்துமுனே
நாளுங் கழிந்து போவதனால்
கேட்ட கேட்ட வப்பொழுதே
கிட்ட வேண்டும் பெருமானே! 197

பாடிப் பாடித் தொழுவதெலாம்
பயனுண் டாக வேண்டுமெனில்
ஆடி ஆடி உலகத்தை
ஆட்டிப் படைக்கும் தலைவாநீ
கூடிக் கூடி என்னோடு
குழைந்து குழைந்து கலந்திடுவாய்
நீடி நீடி இன்பமுற
நின்றன் துணையே வேண்டுமையா! 198

கண்ணைத் திறந்து பார்க்கின்றேன்
காதைத் தீட்டிப் பார்க்கின்றேன்
எண்ணி எண்ணிப் பார்க்கின்றேன்
எங்கும் ஆய்ந்து பார்க்கின்றேன்

விண்ணை அண்ணாந் தளக்கின்றேன்
வேகஞ் செலுத்திப் பார்க்கின்றேன்
அண்ணல் உன்னை மிஞ்சுவதோர்
ஆற்றல் இன்மை அறிகின்றேன். 199

குறியும் நெறியும் அற்றவர்க்கோர்
கொள்கை நல்கித் திருவுடைய
அறிஞ ராக்கும் பெருமானே
அகத்தை யாளும் அருளாளா
வறிய ராக உழல்கின்ற
மனிதர்க் கெல்லாம் நல்வாழ்வு
செறிய வாதை தீர்ந்திடவே
செய்வாய் இன்பஞ் சேர்ந்திடவே. 200

வெற்றுத் தாளில் தூரிகையால்
விந்தைக் காட்சி பலபடைக்கும்
கற்றுத் தேர்ந்த ஓவியன்போல்
கணக்கில் லாத அண்டங்கள்
அற்றுத் தோன்றும் பாழ்வெளியில்
ஆக்கிப் படைத்த பெருமானே
உற்றுப் பார்த்தால் தான்தெரியும்
உருவத் தென்றன் உளம்புகுவாய்! 201

எங்கும் நிறைந்த பேரொளியே!
எல்லாம் வல்ல பெருநிதியே
தங்கும் அருளின் வாரிதியே!
தனக்கு நிகரில் லாதவனே!
அங்கும் இங்கும் தேடாமல்
அகத்தில் உணர்வாய் நிறைவோனே!
தங்க மணியே! என்தெய்வத்
தமிழே உன்னை வணங்குகிறேன்! 202

---

